

# திருநெல்லை

ஆன்மீகத் திங்களிதழ்

நந்தன - ஐப்பசி - 2012 - அக்டோபர்

கோவிலூர் ஆண்டவர்

சீர்வளர் சீர் நாச்சியப்ப ஞான தேசிகர்

கோவிலூர் மடாலயம் - கோவிலூர் - கா

4

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

நந்தன - ஐப்பசி - 2012 - அக்டோபர் இதழ் - 4

சிறப்பாசிரியர் :
சீர் வளர் சீர்
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்

உ
சிவமயம்

### இறை வணக்கம்

வானவர் அசமாந் தொடர்பினால் உலகோர்
வழுத்துறும் வன்னிஜங் கரனை
வான அரதன மணிஅறு முகனை
மாசறு கொற்றவாள் இறையை
வானவர் முதுவன் பாலன வலவன்
வணங்குநல் திருநெலை மாதை
வான வரதனாம் முத்திராம ஈச
வள்ளலை வணங்கிவாழ்த் திடுவாம்.



## ஆசியுரை

### சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

அண்மைக் காலங்களில் – "தகுதி", பற்றி அதிகம் பேசப்படுகிறது. 'தகுதித்தேர்வு' – வைக்கவேண்டும் – கூடாது என்று அதிகம் விவாதிக்கப்படுகிறது. எந்தப் பணிக்காகவும் தகுதியானவர்களைத் தேர்ந்தெடுப்பது தானே முறை – அவசியமும்கூட.

நம் கல்விமுறை – அதிலும் குறிப்பாக இன்றைய அமைப்புகளின் செயல்பாடுகள், பொதுத்தகுதித் தேர்வை எதிர்கொள்ளக்கூடிய திறமையை நம் மாணவர்களுக்குத் தரவில்லை என்பதைத் தான் இந்த விவாதங்கள் காட்டுகின்றன.

தொழிற்கல்வியிற்கூட வேலைக்குத் தகுதியுடைமை (Employment Qualification) பெரும்பாலான மாணவர்களிடையே காணப்படவில்லை என்றே கூறுகிறார்கள். இதற்கு மாணவர்கள் கல்லூரிக்கல்வியுடன் தொழிற்சாலை பற்றிய விஷயங்களை அறிந்து கொள்வது நல்லது.

இதற்கு மாணவர்கட்குக் கற்கும் ஆர்வமும், திறமையும் உழைப்பும் தேவை. உழைப்பு மட்டும் சற்றே குறைவோ என்ற ஐயம் எழுகிறது.

நம்முடைய 'நகரத்தார் நல்வாழ்வு அறநிலை'யின் வாயிலாகத் தொடர்ந்து 12ஆவது ஆண்டாக நம் மாணவர்கட்கு உயர்கல்வி உதவி - வட்டியில்லா - பிணை வேண்டாக் கடன் உதவி - இம்மாதம் வழங்கப்படவுள்ளது. பட்டியல் தயாராகிவிட்டது. முதலாண்டு மாணவர்கள் 98 பேருக்கும் - மற்றைய (2,3,4ஆம்) ஆண்டு மாணவர்கள் 174 பேருக்கும் உதவித்தொகை மொத்தம் ஏறக்குறைய 60 லட்சம் ரூபாய் வழங்கப்பட உள்ளது.

கவனமாக வாழ்க்கையைத் திட்டமிடுங்கள். தேவையில்லா ஆடம்பரங்கள், ஆட்டபாட்டங்களில் ஈடுபட்டுப் பொழுதைக் கழித்துப் பணியிலும் வளத்திலும் பின் தங்கியோர் பட்டியலில் இடம் பிடித்துவிடாதீர்கள். இன்றையச் சூழலில் தொடர்ந்து முன்னேற வேண்டும். தேக்கம் சரிவைக் கொடுக்கும்.

செட்டிநாட்டின் பொருளாதாரச் சூழல் - கோவிலூர் மடாலயத்தின் (நல் வாழ்வு அறநிலை) பங்களிப்பால் நல்ல முன்னேற்றம் ஏற்பட்டு வருகிறது என்பதை யாரும் மறுக்க இயலாது. ஆனால் அந்த மாற்றம் தொடர்ந்து பயன் உள்ளதாக இருக்க நீங்கள் தான் பொறுப்பேற்க வேண்டும்.

தொடர்ந்து இந்த நல்லறம் நடக்க உங்கட்கு வேலை கிடைத்தவுடன் உதவிப் பணத்தை உங்களால் இயன்ற வகையில் / தவணைகளில் திருப்பிச் செலுத்துங்கள். உங்கள் பின்னோரும் கற்று முன்னேற உதவும். நீங்கள் அறிவாலும், உழைப்பாலும் உயருங்கள். உங்கள் வளன் உங்கள் உறவுக்குப் பலமாக இருக்க வேண்டும். முடிந்த வரை அடக்கமாக வாழ்ந்து அடுத்தவருக்கு உதவுங்கள். பெற்றோரைப் பேணுங்கள். எதிர்காலம் உங்கள் கையில்.

வளமான ஆனந்தமான எதிர்காலம் அமைய ஆசீர்வாதம்.

# கோவிலூர் ஆதீன கர்த்தர்கள் வரலாறு

(காப்பியக் கவிஞர் நா. மீனவன்) (தொடர்ச்சி..)

### கோவிலூர் ஆண்டவர்

**திருப்பணிக்காகப் பொருள் சேர்த்தல் :-**

உடனே ஆண்டவர் திருநெல்லை கோயில் திருப்பணிக்காகப் பொருள் பெறும் பொருட்டுத் திருநெல்லை அம்மையின் ஆலயத்தில் பன்னசாலை கட்டிக் கொண்டு நீண்ட நாள்களாய் இருந்து வந்த நெய்க்கோணத்துச் சுவாமிகளை உடன் அழைத்துச் செல்ல எண்ணி அவ்வாறே அழைத்துச் சென்ற பொழுது தாணாவயல் என்னும் கிராமத்தில் உள்ள ஏரிக்கரையின் கரையில் இருந்த மரநிழலில் தங்கி இருந்த பொழுது நெய்க்தோணத்துச் சுவாமிகள் நில நிகழ்வுகளைச் சுட்டிக் காட்டி இவையனைத்தும் உனக்கு எவ்வாறு தோன்றுகின்றன? என்று கேட்க ஆண்டவரும்

சுவர்உறையும் ஓவியங்கள் சுவரே என்றால்
சுபாவமதி போல்பரத்தில் தோன்றா நின்ற
பவம்முதலாம் சங்கற்ப விகற்பம் எல்லாம்
பரவடிவாய்க் கண்டுபர வடிவம் ஆன
தவர்உறையும் கழனிநகர்க் கொற்ற நாதன்
தனது) அருளால் பேதமதி நாயி னேனுக்(கு)
இவன்அவன்நான் அ(து) என்னும் பேதம் இன்றி
எவ்உருவும் சின்மயமாய் இருந்த வாறே.

என்ற கவியைக் கூறித் தமது அனுபவத்தை வெளிப்படுத்தினார். அது கண்ட நெய்க்கோணம் சுவாமிகள் மிக மகிழ்ந்து ஆண்டவருடன் தேவிகோட்டையைச் சேர்ந்த வீரப்ப செட்டியார் மகன் இராமநாதன் செட்டியாரிடம் வந்த செய்தியைச் சொல்ல அவரும் அடிபணிந்து வணங்கி அன்போடு வேண்டிய பொருள் கொடுத்து அனுப்பினர். ஆண்டவரும் கோயிலூரை அடைந்து மண்டபம் முதலான திருப்பணிகளைத் தொடங்கினர்.

**குருநாதருக்குக் குருபூசை :**

தம்முடைய குருநாதர் ஆகிய உகந்தலிங்க தேசிகருக்குச் சிறப்பான குருபூசையை நடத்த எண்ணிய ஆண்டவர் பல சாதுக்களையும் பெரியோர்களையும் வருவித்துப் பால் தயிர் தேன் பழம் முதலியவற்றைச் சேகரித்துத் திருநெல்லை உடனாய கொற்றவாளீசருக்கு அபிடேகங்களைச் செய்து தம்முடைய அன்புச் சீடரான பள்ளத்தூர் முத்து வீரப்பய்யா தலையின் மீது ஒரு தாம்பாளத்தில் வைத்துக் கொற்றவாளீசரை வலம் வந்து அவரது திருமுன் நின்று தமது திருக்கரங்களால் ஒவ்வொரு பிடி அன்னமாக அடியார்கள் அனைவருக்கும் அளித்துத் தாம் உள்ளவரை இவ்வாறே நடத்தி வந்தார்.

**ஆண்டவர் பஞ்சாட்சர குருவைத் துதித்தல் :**

அண்மையில் உள்ள பாதரக்குடி மடாதிபதியும் ஆண்டவருக்கு இளவயதில் பஞ்சாட்சர உபதேசம் செய்தவரும் நகரத்தார் குலகுருவுமான சேநாபதி அடிகள் ஆண்டவர் கோவிலூரில் நடத்திய குருபூசையை அறிந்து தேவிகோட்டை இராமநாதன் செட்டியார் முதலிய நகரத்தாரை வரவழைத்துக் குல குருவாகிய நான் இருக்கும் போது ஆண்டவர் இவ்வாறு குருபூசை செய்யலாமா? என்று கேட்க அதனை ஆண்டவரிடம் வந்து தெரியப்படுத்தினார் இராமநாதன் செட்டியார். உடனே ஆண்டவர் பாதரக்குடி சுவாமிகள் மீது

அஞ்(சு)அக்க ரம்தன்னை எஞ்சாது சிந்திக்கும்
அவர்கட்(கு)ஓர் அல்லல் இல்லை
அயனும்ப டைக்கநினை யான்மறலி கிட்டுகிலன்
அடையவேண் டுவதும் இல்லை
விஞ்சத்த னம்பூமி மைந்தரொடு சுற்றம்அகல்
வீடுதுணை என்ன வேண்டார்
வீணான வா(று)ஆரும் எண்ணார்கள் சொன்னாலும்
மேல்என்று சித்தம் வையார்

மிஞ்(சு)உற்ற இந்தஉப தேசம்த னைப்பெற்றோர்
வெகுகாலம் வாழ்ந்தி ருப்பர்
மெய்யனே துய்யனே அய்யனே அப்பனே
வேதாந்த மோன குருவே
மஞ்சுபதி ககனம்என நிறையும்சி தாகாச
வடிவமே எமது குருவே
வணிகர்கல ஒசதிகள் தழையஉப தேசமழை
மாறாது பொழியும் முகிலே



என்று தொடங்கிப் பத்துக் கவிகளை ஓலையில் எழுதி யான் செய்த குருபூசை பொருள் வைத்த சேரியில் உள்ள எனது ஞானாசிரியரான உகந்தலிங்க சுவாமிகளுக்கு என்றும் எழுதிப் பாதரக்குடிச் சேநாபதி அடிகளுக்கு அனுப்பினார். அதனைக் கேட்ட பாதரக்குடிச் சுவாமிகள் அந்தக்கவிகளைக் கேட்டு மகிழ்ந்து திருநீறு கொடுத்தனுப்பிட ஆண்டவரும் அதனைத் தரித்து மகிழ்ந்தனர்.

**பொருள்வைத்த சேரி வீரபத்திர சுவாமிகள் வருகை :**

இந்நிலையில் பொருள் வைத்த சேரியில் ஆச்சாரியராக இருந்த வீரபத்திர சுவாமிகள் உகந்தலிங்க தேசிகரின் சமாதி ஆலயத்தில் நடத்த வேண்டிய வழிபாடுகள், ஆண்டுக் குருபூசை முதலிய அனைத்தையும் நடத்தி வருங்காலத்தில் ஆண்டவரைக் காண வேண்டும் என்று திருவுள்ளம் கொண்டு அங்கிருந்து புறப்பட்டுக் கோவிலூருக்கு அருகிலே உள்ள ஐயுளி அம்மனின் ஆலயத்தில் இருந்துகொண்டு தம் வருகையை ஆண்டவர்க்குத் தெரியப்படுத்தினார். ஆண்டவரும் பழவகைகள் பலவற்றைத் தாம்பாளத்தில் எடுத்துக் கொண்டு வாத்திய முழக்கத்துடன் சென்று

ஆக நற்கனக மேனி பெற்றுடையர்
ஆவி சற்றும்ஒரு பாவிகள்
ஆலம் ஒத்தவிழி மேரு ஒத்ததனம்
ஆசை ஒத்தவிலை கூறுவார்

மூக விர்த்திகொடு மூட ரத்னம்எனும்
மூடன் ஆனவனை வெல்லுவார்
மோகம் அற்றஉனை நினையும் அன்பரையும்
முழ்கு மாறுசெய வல்லரோ
ஏக போகசுக ரூபன் ஆனஉனை
யானும் நம்பினவன் ஆதலால்
இன்ன மங்கையர்கண் மையல் கொண்(டு) உழல்வ(து)
என்ன பாவம்இ(து) என்னவோ
வேகம் உற்றுவரு கோபன் ஏவுகணை
வேட்ட அட்ட(து)ஒரு வீரனே
வேத ஆகமபு ராண ரூபம்எனும்
வீர பத்திர சுவாமியே.

என்று வரும் கவிகளைப் பாடி வணங்கி நிற்க வீரபத்திர சுவாமிகளும் ஆண்டவரைக் கட்டி அணைத்துக் கண்ணன் தருமனை வணங்கிய காட்சி போல இருக்கின்றது என்று கூறிய வீரபத்திர சுவாமிகளை மடாலயத்திற்கு அழைத்து வந்து அவர் அளித்த திருநீற்றைப் பெற்றுக் கொண்ட ஆண்டவர் திருவுள்ளப்படி சிலநாள்கள் அங்கிருந்தபின் விடை பெற்றுப் பொருள்வைத்த சேரி திரும்பினார். ஆண்டவரும் அவரைத் தம் குருநாதர் இடத்தில் வைத்து வணங்கி வேண்டிய பொருள் கொடுத்து அடியார்களோடு பின் வந்து வழியனுப்பி வைத்தார். வீரபத்திர சுவாமிகள் கோவிலூர் வரும் போதெல்லாம் இவ்வாறு செய்வதை ஆண்டவர் வழக்கமாகக் கொண்டு ஒழுகினார்.

**நல்லான் செட்டியார் பாடம் கேட்டல் :**

வேதாந்த சூடாமணி என்ற நூலை ஆண்டவர் நல்லான் செட்டியார்க்குப் போதித்து வந்தார். நல்லான் செட்டியாரும் கோவிலூர் வந்து நாளொன்றுக்கு இரண்டு கவிகளைப் பாடம் கேட்டபின் அன்றிரவே மீண்டும் காரைக்குடிக்கே வந்து விடுவதை வழக்கமாகக்

கொண்டிருந்தார். ஒரு நாள் பாடம் கேட்க வந்த நல்லான் செட்டியார் தேனாற்றுச் சித்திரை வெள்ளத்தால் வர வழியில்லாது போயிற்று. அதனால் வயல்வழியே செல்லும் கருத்துடன் வரும் போது ஐயுளி அம்மையின் கோயிற்கு அண்மையில் இருந்த கோனேரிக் கண்மாய் உடைந்து கிடந்தது. ஆயினும் அஞ்சாது நல்லான் செட்டியார் உடைப்பில் இறங்கிட வெள்ளம் அவரை இழுத்துக் கொண்டு போனது. அம்மையின் அருளால் அவரை வெள்ளம் தேனாற்றின் கிழக்கே ஒதுக்கியது. மழை வெள்ளத்தினால் தென்னம்பிள்ளைகளுக்கு ஏதேனும் கெடுதி ஏற்பட்டிருக்குமோ என்று பார்க்க வந்த ஆண்டவர் ஆற்றின் கரையில் ஒதுங்கிக் கிடந்தவரைக் கண்டு ஏவலரை அனுப்பி மீட்கச் செய்து பார்த்த பொழுது அவர் நல்லான் செட்டியார் என்பதைத் தெரிந்து கொண்டு ஏன் வெள்ளத்தில் இங்கு வந்தாயெனக் கேட்டதும் நல்லான் செட்டியார் தான் பாடம் கேட்க வந்ததாகக் கூறினார். அவரது உறுதியான மனத்தைப் புரிந்து கொண்ட ஆண்டவர் அவர் இனிப்பாடம் கேட்க வர வேண்டாம் என்றும் தன்னைத் தியானித்தாலே போதுமானது என்றும் கூற நல்லான் செட்டியாரும் அவருடைய உயிர் உள்ளநாள் வரை அவ்வாறே நடந்து வந்தார்.

## ஆண்டவர் திருநெல்லை ஆலயத் திருப்பணியை நிறைவு செய்தல்:

ஆண்டவரும் தம்மினத்தவர்களான தனவைசியர்கள்பாற் சென்று திருநெல்லை ஆலயத் திருப்பணிக்கு வேண்டிய பொருளைப் பெற்றுக் கோவிலூர் வந்து சந்நிதி மண்டபம், இராச கோபுரம், விமானம், குளம், கிணறுகள், நந்தவனம், ஆகியவற்றை உண்டாக்கித் தேரோடும் வீதி, சத்திரம், மடாலயம், வன்னி விநாயகர் ஆலயம், சிதம்பர விநாயகர் ஆலயம் ஆகியவற்றையும் உண்டாக்கித் தம்மை அடைந்தோர்க்கு ஞானதானம் செய்து கொண்டிருந்தார்.

(தொடரும்)

## கோயிலூர்ப் புராணம் (தொடர்ச்சி)

### முனைவர். நா. வள்ளி

**முல்லை :**

பலரும் போற்றும் கானம்; புண்ணியநிரை மேய்த்தோம்பும் மக்கள்; வெள்ளை வரகு செங்கொள் முதலிய தானியங்கள் விளையும் பூமி என்று முல்லைநிலத்தின் இயல்பைக் கூறி அங்குக் காணும் சில காட்சிகளை விவரிக்கிறார் புலவர்.

நிலையில்லா உலகத்தை நிலையானது என்று எண்ணித் துன்பப்படும் மனிதர்களைப் போல, கானல் நீரைத் தெளிந்த நீரென்று நம்பி மான்கூட்டங்கள் ஒருபுறத்தே திரிகின்றன. மறுபுறம் ஆநிரைக்கூட்டங்கள் மேய்ந்துகொண்டிருக்கின்றன.

மாயோனாம் மாலவன் உறைகின்ற முல்லை நிலத்தில், மாலவனின் நிறம் கொண்ட காயா மலர்கள் கார்கால மழையால் என்றும் காயா மலர்களாகப் பூத்துக் குலுங்குகின்றன. பிடாவும், பலாசும், காயாவும் எனப் பன்மலர்கள் பூத்திருக்கின்ற காடு அருச்சிப்பாருக்கு ஆன் ஐந்தும், அறுகு, வில்வம், துழாய், குருந்து, கொன்றை முதலிய மலர்களையும் நல்கும். அப்படிப்பட்ட புறவாகிய காட்டின் மேன்மையைச் சொல்ல முடியுமா? என்கிறார் மகாவித்துவான்.

**மருதம்:**

அடுத்து மருத நிலத்தின் வளம் பேசப்படுகிறது. பாண்டிநாட்டு மருத நிலத்து வளத்தை விரிவாகப் பாடுகிறார் புலவர். பொருநையாகிய தாமிரவருணியாற்றின் தன்மை பின்வரும் பாடலில் நன்கு விளக்கப்படுகிறது.

"விரும்பு பெருஞ் செம்மணியும் வெண்முத்தும் எடுத்தெறிந்து
சுரும்பு செறி மலர்ப்பிறங்கல் சுமந்து கரையிறவொதுக்கி
அரும்புபல விரைவிருக்கம் அடிபறித்துச் சாய்த்தார்த்து
வரும் புதிய திரைபொங்க மண்டியெழு புனற்பொருநை"

மழைபெய்ததால் பொருநை நதியில் வெள்ளம் பெருக்கெடுத்துச் செம்மணிகளையும் வெண்முத்துக்களையும் வாரி இறைத்துக் கொண்டு வந்தது. மேலும் வண்டுகள் மொய்க்கின்ற புதுமலர்களைச் சுமந்துகொண்டும், கரைகளை இடித்துக்கொண்டும் மரங்களை வேரோடு சாய்த்தும் அலைகள் பொங்க ஆரவாரத்தோடு விரைந்து ஓடுகிறது புனற்பொருநை என்று பொருநைக் காட்சியைக் கண்முன்னே காட்டுகிறார் மகாவித்துவான்.

பாண்டிய நாட்டில் பொருநையாறு மட்டும் இல்லை; வளமான வையையும் ஓடுகிறது. பல கிளைகளையுடையதும் உயர் சைவத்தின் மேன்மையை உலகிற்கு எடுத்துரைத்ததும் பல புலவர்களால் பாடப்பட்டதுமாகிய வையை என்று அந்த ஆற்றின் இயல்பு கூறப்படுகிறது. மதுரையில் திருஞானசம்பந்தர் சமணர்களோடு புனல் வாதம் செய்து, வாழ்க அந்தணர் என்று தொடங்கும் பதிகத்தை ஏட்டிலே எழுதி வையையாற்றிலே இட, சமணர்களும் தங்கள் ஏடுகளை இட்டனர். சமணர்களது ஏடுகள் ஆற்றோடு போக, சம்பந்தரின் ஏடு, வையையாற்றின் கரையிலே ஒதுங்கி சைவத்தின் மேன்மையை உலகறியச் செய்தது என்ற செய்தி வையையாற்றைப் பற்றிக் குறிப்பிடுகையில் எடுத்துரைக்கப்படுகிறது.

ஆறுகள் மட்டுமல்ல. மழைநீரால் நிரம்பப் பெற்ற ஏரிகளும் பாண்டிநாட்டில் உள. ஆசிரியர் கற்பிக்கும் கலைகள் எல்லாம் மாணவனின் மதிக்கேற்பப் புகுவன போலப் பல்வேறு வாய்க்கால்கள் வழியாக ஓடிவரும் பெரும் புனல் கழனிதொறும் பாய்ந்து அவற்றின் கொள்ளளவிற்கு ஏற்ப நிறைக்கின்றன. கழனிகளில் நீர்நிறைந்த போது, உழவர்கள் உழுதல் தொழிலை மேற்கொள்வதற்கு விரைந்தார்கள். பெறலரிய பெரும்பயன்நூல் மதியாளர்க்குக் கிடைத்தால் அந்நூலைத் தேர்ந்துணர எப்படி அவர்கள் விரைவார்களோ அப்படி உழவர்கள் விரைந்தார்கள். விரைந்த

உழவர்கள் நல்ல எருதுகளை ஏரிலே பூட்டி, கிழக்கு மேற்காகவும், தெற்கு வடக்காகவும் ஆழமாக உழுதார்கள். நல்லாசிரியர், எங்ஙனம் விருப்பு வெறுப்பின்றி மாணாக்கரைத் திருத்தி வழிநடத்துவாரோ அதுபோல உழவர்களும் கழனிகளைத் திருத்தினார்கள். ஆசிரியர் தன்னைச் சரணடைந்த மாணாக்கர்களுக்கு நல் வித்தைகளைக் கற்றுத்தருவது போல, உழவர்கள் நல்ல நெல் வித்தை விதைத்தார்கள். நெல்வித்துக்கள் பசுமை நிறத்துடன் முளைவிட்டன. முளைத்த நெற்பயிர்கள் விருத்தியுறுவதற்காக அதைப்பிடுங்கி வேறிடத்தில் நட்டு வைத்தனர்.

இதுவரை உழவர்களின் செயல்களைக் கூறிய புலவர் அடுத்துக் கழனிகளில் உழத்தியரின் செயற்பாட்டைக் கூறத்தொடங்குகிறார். கழனிகளில் கருங்குவளையும் செங்குவளையும் தாமரையும் களைகளாக முளைத்திருந்தன. களைகளைக் களையும் பருவமறிந்த உழத்தியர் தங்கள் குழாத்தோடு கழனிகளில் இறங்கித் தங்கள் கைவளைகள் சேற்றிலே பதியுமாறு, களைகளைப்பறித்துக் கரைகளிலே போடுகிறார்கள். அப்போது வயல்களில் நிறைந்திருக்கும் நீரிலே தம் முகம் கண்டு இதுவும் ஒரு தாமரையோ என்று மயங்குவர், இதைக் கவிஞர்,

களைகளையும் பருவமுணர் கடைசியர் தம்குழாம்புகுந்து
வளைகழனி யிடைத் துவன்று வாரிசங்கள் கொய்திடுவார்
தளையுறு நீரிடை மீட்டுந் தங்கள் முக நிழல்கண்டு
விளையுமிது ககனார விந்தமோ என மருள்வார்

என்ற பாடலில் நயமாக எடுத்துரைக்கிறார். மேலும் தரைமுழுதும் இனிதோம்பும் தண்பயிருக்கு ஊறாய் முளைத்திருக்கின்ற களைகளை உழத்தியர்கள் களைந்தெறிவது குடும்பத்தைக் கெடுக்கின்ற குற்றங்களைக் களைவது போன்றிருந்தது என்கிறார் புலவர். களை எடுத்த வயலில் உலகம் வியக்கும்படியாகக் கதிர்கள் செழித்து

வளர்ந்தன. உலகம் யாவையும் புரக்கின்ற அம்மை அப்பனின் அருளால் பயிர்கள் செழித்து விளைந்தன.

விளைந்த நெற்கதிரை அரியும் பருவமுணர்ந்த உழவர்கள் கூன் இரும்பு கொண்டு அரிந்து நெற்களஞ்சியத்தில் சேர்த்தனர். பொன்மலை போல் குவித்து வைக்கப்பட்டிருந்த கதிர்களைப் போரடியல் செய்தனர். முந்திரிப் பழத்திலிருந்து முந்திரிக்கொட்டையை வேறாக்குவதுபோல நெல்மணிகளையும் வைக்கோலையும் வேறுவேறாக்கினர். பிறகு அரசனுக்குக் கொடுக்க வேண்டிய நெல்லை இறையாகக் கொடுத்துப் பின் எஞ்சியவற்றைத் தங்கள் கூடுகளில் சேமித்தனர். சேமித்தவற்றைத் தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல், தான் என்ற ஐம்புலத்தாரையும் ஓம்பி வாழுகின்றனர். இப்படிப்பட்ட பெறலரிய பேறுபெற்ற பெருங்குடிகள் வாழும் மருதநிலம் என்கிறார் புலவர். இல்லறத்தானுக்குரிய கடமைகளைக் கூறுகையில் வள்ளுவர் தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்ற ஐம்புலத்தாறு ஓம்பல்தலை எனபுரர். இக்குறட் கருத்தை அப்படியே மகாவித்துவான் எடுத்தாண்டுள்ளார் இப்பாடலில். அப்பாடலாவது

"இறைகொள உள்ளதை உதவி எச்சம் அளந்து எடுத்துப்போய்
நிறைபெருங் கூடுகள் நிறைத்து நிகழ்தரு தென்புலத்தார்முன்
அறைதரு தாம் ஈறாக ஐம்புலத்தாறு உறஓம்பிப்
பெறலரிய தவமாக்கும் பெருங்குடியே எவ்விடத்தும்"

என்பதாகும்.

**நெய்தல்:**

நெய்தல் நிலத்தை வருணிக்கப் புகுந்த கோயிலூர்ப் புராணம்,

"சலதி மீன்கணம் தரைமிசை வெடிகொடுதாவக்
குலவு புன்னைகள் உகுப்பன குளிர்திரள் அரும்பு
கலவு மாமுகில் ஆயிடை நீருண்டு கறுத்து
நிலவு மின்னல்செய்து ஆலிகள் உகுப்பன நிகரும்"

என்கிறது. கடலிலே உள்ளமீன்கள் விசையொடு கடற்கரையிலே உள்ள புன்னை மரத்தின் மீது தாவ, புன்னை அரும்புகள் கடற்கரையில் சிந்திக்கிடக்கின்றன. இக்காட்சி, கடல்நீரை உண்டு கறுத்தெழுந்த மேகங்கள் விண்ணிலிருந்து வெண்மையான ஆலங்கட்டி மழைத்துளிகளை உகுப்பதைப் போலிருந்தது. ஞாழல், புன்னை, தாழை, நெய்தல் போன்ற மலர்களின் மணம், கடற்கரை முழுதும் நிரம்பி, கடற்கரையின் புலவு நாற்றத்தை மாற்றியது. தங்களைப் புரப்பவர்களுக்கு ஏதேனும் பழி ஏற்பட்டால், அதைத் தீர்த்துப் பொலிகின்ற உத்தமர்களைப் போல மேற்கூறிய மரங்களில் பூக்கள் கடலின் புலவுநாற்றத்தை மாற்றின என்று அருமையான உவமையால் விளக்குகின்றார் மகாவித்துவான்.

அலைமிசைத் திமில் செலுத்திடும் அரவமும் கடல்படு செல்வமாகிய மீன்களைப் பிடிப்பதற்காக வலைவீசும் பரதவர் எழுப்பும் ஓசையும், வலையிடைப்பட்ட மீன்களைச் சேகரிப்பவரின் ஆரவாரமும், மீன்களைத் துண்டுகளாக்கிக் கூறுபோடுபவரின் முழக்கமும் என நெய்தல் நிலமெங்கும் ஒரே ஆரவாரமாக இருந்தது. மேலும் கடலில் சென்று பிடித்து வந்த மீன்களைப் பிளப்பவர் ஓசையும், மீன்களைக் கவர வருகின்ற பறவைகளைக் கோல்கொண்டு ஓச்சுவார் ஓசையும், மீன்களை விலை பகர்வார் எழுப்பும் அரவமும் நெய்தல் நிலத்தில் மிகுதியாக இருந்தன. இந்த ஆரவாரங்கள் கடலலைகளின் ஆரவாரத்தையும் விஞ்சி நின்றன.

இவ்வாறாகப் பாண்டிநாட்டு நெய்தல் நிலத்து இயல்பைக் குறிப்பிட்டு வருணித்த புலவர், பாண்டிநாட்டுக் கடற்கரைகளில் அமைந்துள்ள இறைத்தலங்களையும் குறிப்பிட்டு, இத்தகைய நெய்தலுக்கு ஒரு குறையுண்டோ என்கிறார்.

செங்கை ஆரழல் சிவபிரான் உத்தரகோச
மங்கைவாழி ராமேச்சுரம் வண்புனவாயில்
கங்கையாள் மகன் சீரலைவாய் முதற்கைக்கொள்
கொங்கை மேவிய நெய்தலுக்கு ஒரு குறையுண்டோ?

இப்பாடலில் கடற்கரைத் தலங்களாகிய உத்தரகோச மங்கை, இராமமேச்சுரம், திருப்புனல்வாயில், திருச்செந்தூர் ஆகியவை குறிப்பிடப்படுகின்றன.

**பாலை:**

பாண்டிநாட்டுப் பாலை நிலத்தை ஒரேயொரு பாடலில் வருணிக்கிறார் மகாவித்துவான். குரவு, பாலை, நெல்லி, ஈச்சமரம் முதலிய மரங்களும், கொற்றவை கோட்டமும் நிறைந்த பாலையும் புகழுக்குரிய நிலமேயாகும் என்பது அவர் வாக்கு.

இறுதியில் திணைமயக்கமாக இடம் பெற்றுள்ள ஐந்துபாடல்களும் மகாவித்துவானின் கற்பனை வளத்திற்குச் சான்றாக விளங்குகின்றன. மேகங்கள் முழவாக முழங்க மயிலாகிய மகள் மலையாகிய அரங்கினில் ஆடுகின்றாள், அந்த அழகிய நடனம் கண்டு மகிழ்ந்து கானகத்திலுள்ள கொன்றை மரங்கள் பொன்னாகிய பூவைச் சொரிந்தன.

கானகத்தில் மேய்கின்ற, குடம் போன்ற மடியையுடைய பசு தன் கன்றுக்குப் பாலை வயிறார ஊட்டுகிறது. எஞ்சிய பால் வாய்க்காலாக ஓடி அருகிலுள்ள மருதநிலத்துத் தாமரைக்குளத்தில் கலக்கிறது. தாமரைத் தடாகத்திலுள்ள அன்னம் பாலையும் நீரையும் பிரித்துப் பாலை உண்டு வளர்கிறது என்று குறிஞ்சி, முல்லை, மருதநில வளங்கள் ஒன்றோடு ஒன்று மயங்கிக்கிடப்பதைக் காட்டுகிறது கோயிலூர்ப் புராணம்.

இவ்வாறாகக் கோயிலூர்ப் புராணம் பாண்டிநாட்டின் பல்வளத்தைத் திருநாட்டுப்படலம் மூலம் சிறப்பாக எடுத்துரைக்கிறது.

(தொடரும்)

# கீதாசாரத் தாலாட்டு

(தொடர்ச்சி)

## நூல்

31. **உற்றதுஎத னால்எனவே உள்ளம்அவி வேகம்உறப்**
**பற்றியதன் மேலும்அதன் பண்புவந்தது என்றவரோ.**

மனத்தினைச் சேர்ந்த சுக துக்கங்களை ஆன்மாவும் அனுபவிப்பது போலத் தோன்றுவது எதனால்? என்று அருச்சுனன் வினவ அவிவேகத்தினால் ஆன்மாவினிடம் மனத்தின் சுக துக்க அனுபவம் வந்ததுபோல் தோன்றுகிறது என்று கூறியவரோ?

32. **அடுத்தகுணம் போமோபின் ஆன்மாவை விட்டுஎனவே**
**எடுத்தசெம்பூ நிறம்படிகத்து ஏறுதல்போல் என்றவரோ.**

ஆன்மாவினை அவ்விதம் கட்டுப் படுத்திய இன்ப துன்பங்களாகிய குணங்கள் ஆன்மாவை விட்டு நீங்குமா? என்று அருச்சுனன் வினவ, சிவப்பான பூவின் நிறம், அதன்முன் இருக்கும் வெண்மையான படிகத்தின் மீது படிந்து படிகமும் சிவப்பாகத் தோன்றும். படிகத்தின் முன்னுள்ள செம்பூ நீங்கியதும் படிகத்தின் மேலுள்ள சிவந்த நிறம் நீங்குவது போல் ஆன்மாவுடன் தொடர்புற்ற இன்ப துன்பங்கள் விவேகம் அடைந்த காலத்துத் தானாகவே நீங்கும் என்று விடை தந்த கண்ணனோ ?

33. **சுத்தபடி கம்போல்சொ ரூபமாய்த் தான்இருக்க**
**மெத்தவும்ஆ சாமலினம் மேவியதுஎன் சொல்லும்என.**

களங்கமில்லாத பளிங்கு போன்ற ஆன்மா எப்பொழுதும் ஒரே தன்மையுடையதாய் இருக்க, ஆசை என்ற களங்கம் ஆன்மாவை மிகுதியும் பாதிப்பது எதனால்? என்று அருச்சுனன் கேட்டான்.

34. **அநாதியாம் வாசனையால் அடைந்துஆ சாமலினம்**
**மனோபந்தம் இருக்கில்முத்தி வாராதுஎன்று**
**உரைத்தவரோ.**

தொன்று தொட்டு வரும் பழைய கருமங்களின் வாசனையால் மனமானது ஆசையாகிய களங்கத்தை அடைந்தது. மனத்தின் கண் ஆசை பாசம் இன்பம் துன்பம் இவை இருக்குமாயின் வீடு பேறு கிடைக்காது என்று கூறிய கண்ணனோ ?

35. **பந்தம்எது முத்திஎது பகுத்துரைக்க வேண்டும்என்தன்**
**சிந்தைதெ ளியஎன்று திருத்தாளி னைவணங்க.**

பந்தம் என்பது என்ன? வீடுபேறு என்பது யாது? என் சித்தம் தெளிவடையும் பொருட்டு இவற்றைப் பிரித்து உரைத்தருள வேண்டும் என்று கண்ணபிரானின் திருப்பாதங்களை அருச்சுனன் வணங்கிட

36. **தேகாதி தான்எனவே சேர்அபிமா னங்கள்பந்தம்**
**ஆகாத மானம்விடில் அரியமுத்தி என்றவரோ.**

உடல் முதலியவற்றைத் தன் வடிவம் என நம்புகின்ற அபிமானமே நான், எனது என வரும் (பற்றுக்களுமே) பந்தமாம். அபிமானம் நீங்கினால் அதுவே அரிதான வீடு பேறு ஆகும் என்று கூறியவரோ ?

37. **அபிமானம் வரும்வகையும் ஆங்குஅதனைத்**
**தீர்வகையும்**
**தபியாமல் நான்அறியத் தயவுஆகக் கூறும்என.**

முற் கூறிய நான் எனது என்னும் பற்றினால் உண்டாகும் அபிமானமும், அதனால் ஏற்படும் பந்தம் வருகின்ற தன்மையையும், அப்பற்றினை நீக்குகின்ற தன்மையையும் அடியேன் எளிதாக அறிய அருள் கூர்ந்து கூறுக என்று அருச்சுனன் கேட்க

38. **மறந்திடும்அஞ் ஞானத்தால் மானம் வந்தது அஞ்ஞானம்**
**இறந்துவிடின் மானமும்போம் என்னஉரை செய்தவரோ.**

ஆத்ம சொரூபமான தன் வடிவினை மறதி என்னும் அறிவின்மையால் உடலில் நான் என்னும் புத்தி வந்து சேர்ந்தது.

அவ்வறிவின்மை நீங்குமாயின் நான் என்னும் அபிமானமும் உலகப் பற்றும் நீங்கிவிடும் என்று விடை தந்த பெருமானோ ?

39. **அந்தமுறை அஞ்ஞானம் அணுகுவதும் போவதுவும்**
**சந்தயம்இல் லாதுஅறியத் தயவுஆகக் கூறும்என.**

அஞ்ஞானம் வருகின்ற வகையும் அது தீர்கின்ற வகையும் எப்படி என்று தெளிவாக நான் உணரும் பொருட்டுத் தயவு செய்து கூறுக என்று அருச்சுனன் வேண்டினான்.

40. **அஞ்ஞானம் வந்தது அனாதிஅது சொல்வதுஅல்ல**
**மெய்ஞ்ஞானத் தாலே விடும்என்று உரைத்தவரோ.**

அவ்வறியாமை அநாதியானது. அவ்வறிவின்மை இடையில் வந்ததாகச் சொல்ல முடியாது. குருவருளால் கிடைத்த தத்துவ ஞானத்தினாலேயே அஞ்ஞானம் விட்டுப் போகும் (ஒளிவந்தால் இருள் நீங்குவது போல) என்று கூறிய கண்ண பெருமானோ ?

41. **இரவிஎதிர் அடுத்துவந்த இருள்போல அஞ்ஞானம்**
**வரவிதியோ சோதிதன்பால் வந்தவகை ஏதுஎனவே.**

சூரியன் முன்னர் இருள் வந்துள்ளது என்பது பொருந்தாது. இருள் வடிவமான அறியாமை அறிவு வடிவமான ஆன்மாவை எப்படி மறைக்கும்? அது எப்படிப் பொருந்தும்? என்று அருச்சுனன் வினவினான் ?

42. **அந்தஅறி வுவந்தால் அஞ்ஞானம் இல்லைஅப்பால்**
**சந்ததமும் ஆனந்த சாகரம்காண் என்றவரோ.**

அறிவு வடிவமாக இருக்கும் (பிரம்ம சொரூபமான) ஆன்மாவில் அறிவின்மை என்னும் இருள் ஒரு போதும் சேர்தல் பொருந்தாது. இந்த அறிவு உண்டானபின் அறியாமை என்பது இல்லை. இவ்விதமான அறிவு உறுதியாய்த் தோன்றியபின் எப்போதும் நீ இன்பக் கடல் வடிவம் என்று அறிவாய் என்று விளக்கம் தந்த பெருமானோ ?

43. **வேதாந்தத் தால்குருவால் மெய்ஞ்ஞானம் வந்தவுடன்**
**தீதான துக்கசுகம் தீராதது ஏதெனவே.**

குருவின் அருளால் கிடைத்த வேதாந்தப் பயிற்சியால். உண்மையான ஆத்ம அறிவு வந்த அந்தப் பொழுதிலேயே கொடிய இன்ப துன்பங்கள் தீராமைக்கு என்ன காரணம்? என்று அருச்சுனன் கேட்க

44. **பற்றுஅறுமோ துக்கசுகம் பரோட்சஞா னத்தாலே**
**அற்றம்ஆம் அவ்இரண்டும் அபரோட்சத்து என்றவரோ.**

பரோட்ச ஞானம் என்ற தத்துவ அறிவினால் அறிவின்மை நீங்காதபோது அதனால் உண்டாகும் இன்ப துன்பங்களின் பற்று நீங்குமோ? (ஆகாது என்பது கருத்து) எந்த அறிவால் நீங்கும் எனக் கேட்பின், அனுபவ அறிவினால் (அபரோட்ச ஞானத்தால்) அறிவின்மை நீங்கி இன்ப துன்பங்களாகிய இரண்டும் நீங்கும் என்று கூறியவரோ ?

45. **பரோட்சம்அப ரோட்சம்எது பகுத்துஉரைக்க**
**வேண்டும்என்தன்**
**திரோதம்ஆம் புத்திநன்றாகத் தெளியும்ப டிக்குஎனவே.**

பரோட்ச அறிவு எது? அபரோட்சம் எது? மாயை என்ற திரையினால் மறைக்கப்பட்டிருக்கும் புத்தியுடைய எனக்குத் தெளிவுண்டாகும்படி உரைத்தருள்க என்று அருச்சுனன் கேட்க

46. **பகர்ந்தசத்த ஞானம்ப ரோட்சம்அ னுபவத்தால்**
**அகம்பிரமம் எனும்ஞானம் அபரோட்சம் என்றவரோ.**

கேள்வியினால் (குருமுகமாக) உணரப்படும் அறிவு முன்னர்க் கூறிய பரோட்ச ஞானம் ஆகும். பயிற்சியின் முதிர்வால் நானே பிரம்ம சொரூபம் என்று உணரும் அறிவே அபரோட்ச ஞானம் என்று கூறிய கண்ணனோ ?

(தொடரும்)

# சேந்தினி பழனியப்பய்யா பாடிய செவ்வேள்

**முனைவர் நா. வள்ளி**

நவம்பர் 2011 பினாங்கு தண்ணீர்மலை முருகன் கோயில்
கும்பாபிடேக மலரில் வெளியானது

நகரத்தார்கள் வசிக்கும் ஊர்களுள் ஒன்றாகிய காரைக்குடியில் நகரத்தார் மரபில் பிள்ளையார்பட்டிக் கோவில் பிரிவில் கி.பி. 1791 இல் தோன்றியவர் கோவிலூர் ஆண்டவர் என்றழைக்கப்படும் முத்துராமலிங்க தேசிகர்; அவர் கருவிலே திருவுடையாராகத் திகழ்ந்தார்.

அவர் காலத்தில் காரைக்குடியில் சிவன்கோயில் இல்லை. அதனால் காரைக்குடிக்கு அருகிலுள்ள கழனிவாசலுக்குச் சென்று அங்குக் கோயில்கொண்டு எழுந்தருளியுள்ள திருநெல்லையம்மன் உடனாய கொற்றவாளீசுவரரை வணங்குவதை வழக்கமாகக் கொண்டிருந்தார் முத்துராமலிங்கர். அக்கோயில் பழுதுபட்டிருப்பதைக் கண்ட அவர் 1808 இல் திருப்பணியைத் தொடங்கி நகரத்தார் பொருளுதவியோடு செய்தார். முத்துராமலிங்கர் செய்த திருப்பணிகளுக்குப் பிறகு கோயிலைச் சுற்றி ஊரமைந்து அப்பகுதி கழனிவாசலிலிருந்து பிரிந்து கோவிலூர் என்று அழைக்கப் பெற்றது.

கி.பி.1818 இல் கோவிலூர் ஆண்டவர் என்று அழைக்கப்படும் முத்துராமலிங்க தேசிகர் கோவிலூரில் வேதாந்தமடம் ஒன்றை நிறுவி அதன் முதல் தலைவராகவும் திகழ்ந்தார். அவர் காலம் முதற்கொண்டு இன்றுவரை இம் மடம் மிகச் செம்மையாகச் செயற்பட்டுவருகிறது.

சாதி இன வேறுபாடற்ற அடியார்குழாம் உணவு உடை இருக்கை முதலியவற்றிற்குக் கவலைப்படாமல் அமைதியாகத் தவம் தியானம் முதலிய ஆத்ம சாதனைகள் செய்து வரவும் இறைவழிபாட்டில் முழுமனதுடன் ஈடுபடவும் இம்மடம் வழிவகை செய்கிறது. இம்மடத்தில்

வடமொழியிலுள்ள வேதாந்த நூல்கள் தமிழ்ப்படுத்தப்பட்டு முறைப்படி பயிற்றுவிக்கப்பட்டன. வடமொழி தெரிந்தவர்கள்தான் வேதாந்தம் படிக்கமுடியும் என்ற நிலைமாறி தமிழ்மொழியில் வேதாந்தம் படிப்பதற்கு வகைசெய்தமடம் என்றளவில் வேதாந்த தத்துவ வரலாற்றில் கோவிலூர் மடம் முக்கிய இடம்பெற்றுள்ளது .

நகரத்தார் மரபைச் சேர்ந்த துறவிகளே இம்மடத்தின் மடாதிபதியாக வரமுடியும். நகரத்தார்களில் துறவு மேற்கொள்ளும் வழக்கம் கோவிலூர் ஆதீனம் ஏற்பட்ட பின்னரே பெரிதும் பரவியது. 96 ஊர் நகரத்தார்கள் ஒருங்குகூடி ஒரு முடிவு எடுக்கவேண்டு மென்றால் கோவிலூர் மடத்தில் கூடுவது வழக்கம்.

நகரத்தார்கள் கீழ்த்திசை நாடுகளுக்குச் சென்று பெரும்பொருள் ஈட்டிய காலக்கட்டத்தில் வாழ்ந்த முத்துராமலிங்க தேசிகரும் அவரைத் தொடர்ந்து வந்த மடாதிபதிகளாகிய துறவு ஆண்டவர், கருணாநிதிசுவாமிகள், திருக்களர் வீரப்ப சுவாமிகள் போன்றோரும் தாங்கள் கோயில் திருப்பணிகள் செய்ததுமின்றி நகரத்தார்களையும் தத்தம் ஊர்களிலும், பாடல் பெற்ற தலங்களிலும் ஏனைய தலங்களிலும் திருக்கோயில் திருப்பணிகளோடு வேதபாடசாலைகள், பசுமடங்கள், குருபூசை மடங்கள், நந்தவனங்கள், அன்னசத்திரங்கள் முதலான அறப்பணிகள் செய்யவும் தூண்டினர்; நகரத்தார்களும் அவ்வாறே செய்தனர். இவ்வாறு கோவிலூர் ஆண்டவர் காலம் முதல் திருப்பணிகள் செம்மையாக நடந்துவருவதை

மடமுண்டோ சிவாலயங்கள் மிகுதியுண்டோ
வாசிட்டம் படிப்பதுண்டோ மனதுள்ஞானத்
திடமுண்டோ நால்வர்தமிழ் படிப்பாருண்டோ
திவ்வியமாம் உதாரமுதற் குணங்களுண்டோ
விடமுண்டோன் அடியார்குழாம் மிகுதியுண்டோ
மெய்யறம் சத்திரம் விரைப்பூங்காவு முண்டோ

வடகைலைக்கு இறைவனெனும் முத்துராம
வள்ளல் திருக்கழனிநகர் வாராமுன்னே.

என்ற பாடல் மூலம் அறியலாம். உலகறிந்த, நகரத்தார்களின் கோயில் திருப்பணிகளுக்கும் மற்ற அறப்பணிகளுக்கும் முன்னோடியாகத் திகழ்ந்த கோவிலூர் ஆண்டவரின் சீடர்களில் ஒருவரான சேந்தினி பழனியப்பய்யா என்பவர்தான் மேற்சொன்ன பாடலைப் பாடியவர். இவர் கோவிலூர் ஆண்டவர் காலத்திலும் அவருக்கு அடுத்த பட்டங்களான துறவு ஆண்டவர் மற்றும் கருணாநிதி சுவாமிகள் காலத்திலும் வாழ்ந்திருக்கிறார். கோவிலூர் ஆண்டவர் முதற்கொண்டு கோவிலூர் மடத்தைச் சேர்ந்த பலரும் கவிபாடும் ஆற்றல் கைவரப் பெற்றவர்களாக இருந்திருக்கிறார்கள். அந்த வகையில் சேந்தினி பழனியப்பய்யாவும் பல பாடல்களை இயற்றியுள்ளார். சொர்ணநாதபுரம் பழனியப்பய்யா என்றும் மேலமடம் பழனியப்பய்யா என்றும் இவர் அழைக்கப்பட்டிருக்கிறார்.

கோவிலூர் ஆண்டவரிடமும் துறவாண்டவரிடமும் வேதாந்தம் கற்ற பழனியப்பய்யா பின்வரும் நூல்களை இயற்றியுள்ளார்.

1. வெயிலுகந்த விநாயகர் பதிகம்
2. பழனிமலைச் செட்டியார் மாலை
3. கல்லுளி மாலை
4. பொன்மாரி அந்தாதி
5. சீரலைவாய்ப் பதிகம்
6. பழனிப்பதிகம்
7. விடுதிக்கவிகள்
8. தோத்திரப் பாமாலை
9. தனிப்பாடல்கள்
10. ஆண்டவர் முத்துராமலிங்க ஞான தேசிகர் சரித்திரம்.

இவைகளுள் முதல் ஏழு நூல்களும் அடங்கிய தொகுப்பு நூல் ஒன்று 1898 ஆம் வருடம் வெளிவந்துள்ளது. பாண்டி நாட்டிலுள்ள கோயிலூர் மடாலயத்தின் சிஷ்யராகிய சொர்னநாதபுரம் பழனியப்பய்யா அவர்கள் இயற்றிய பாடற்றிரட்டு என்று தலைப்பிடப்பட்டுள்ள அந்நூல் கோவிலூர் மடாலய சிஷ்யராகிய ஒய்யக்கொண்டான் சிறுவயல் முரு. அள. சுப்பிரமணியஞ் செட்டியாரவர்களால் தஞ்சாவூர் சதாவதானம் சுப்பிரமணிய ஐயரவர்கள் முன்னிலையில் பரிசோதிக்கப்பட்டு, சென்னை மதராஸ் ரிப்பன் அச்சுக் கூடத்தில் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

பழனியப்பய்யா பாடிய நூல்களுள் கல்லுளிமாலை, செட்டியார் மாலை, பழனிப்பதிகம், சீரலை வாய்ப் பதிகம் ஆகியவை முருகன் மீது பாடப்பெற்றவை. முருகன்மீது குறிப்பாக, பழனியாண்டவன் மீது அய்யாவிற்கு உள்ள ஈடுபாட்டை இந்நூல்கள் மூலம் காணமுடிகிறது. செட்டியாகிய முருகனுக்கு அப்பன் என்றபொருளில் சிவபெருமானைச் செட்டியப்பன் என்று குறிப்பிடுவார். நம் பழனியப்பய்யாவும் மிக உரிமையோடு முருகனைச் செட்டியார் என்றும் செட்டி என்றும் செட்டியார் மாலை, கல்லுளிமாலை ஆகிய நூல்களில் குறிப்பிடுகிறார். பல வரலாற்றுச் செய்திகள், இலக்கியப் புராணச் செய்திகள் ஆகியவற்றை உள்ளடக்கியவாய் இலக்கியச்சுவை மிகுந்து காணப்படுகின்ற நூல்கள் இவை. செட்டியாரே என்றும் செட்டி என்றும் முருகனை அழைத்து எனக்குப் பொன்னும் பொருளும் தா என்று உரிமையோடு கேட்கிறார் பழனியப்ப அய்யா. பொருள் இலார்க்கு இவ்வுலகம் இல்லை உண்மைதான். ஆனால் துறவிக்குப் பொன்னும் பொருளும் எதற்கு? தேவையா என்றால் தேவைதான் என்கிறார் அய்யா. துறவியான தான் பொன்னும் பொருளும் கேட்பதற்கான காரணத்தையும் அவரே கூறுகிறார். நகரத்தார்கள் கிழக்காசிய நாடுகளுக்குச் சென்று தொழில் செய்து பெரும் பொருள் ஈட்டிச் சிக்கனமாக வாழ்ந்து அதே சமயம் கோயில் திருப்பணிகளுக்கு அள்ளிஅள்ளிக் கொடுத்த காலகட்டத்தில் வாழ்ந்தவர் அவர் என்பதை நாம் இங்கு நினைவில் கொள்ள வேண்டும்.

வரவின்றி செலவழித்தல் செட்டியாரே – தன
வணிகர் முறையன்று செட்டியாரே
பட்டினத்தார் முதலானோர் செட்டியாரே – பணம்
பழுதென விடுத்தாரல்லோ செட்டியாரே
சிட்டர் நெறியதுதான் செட்டியாரே – அறஞ்
செய்ய நிதிவேண்டினேன் காண் செட்டியாரே

என்று அறஞ்செய்வதற்காகத்தான், தான் பொருள் கேட்டதாகக் கூறுகிறார். வள்ளலான அவனிடம் தான் பொருள்வாங்காமல் விடமாட்டேன் என்கிறார்.

ஏழைச் செட்டியைப் பாடினும் செட்டியாரே சிறிதும்
இல்லையெனச் சொல்லுவாரோ செட்டியாரே
மாழைச் செட்டியான உம்மைச் செட்டியாரே பாடி
வாங்காமல் நான் போகலாமோ செட்டியாரே

இப்பாடலில் வறுமை நிலையிலிருந்தாலும் வருகிறவர்களுக்கு இல்லை எனச் சொல்லாதவர்கள் நகரத்தார்கள் என நகரத்தார்களின் பண்பைப் பதிவு செய்கிறார் பழனியப்பய்யா.

துறவிக்கு ஆசை வரலாமா? வருகிறதே; முருகன் அருளால் கிடைக்கும் பொருளைக் கொண்டு என்னவெல்லாம் செய்யத் தனக்கு ஆசை எனப்பட்டியலிடுகிறார். பொன் இரந்தேன் என்று என்னை இகழாதீர் கழனிப் புண்ணியர்க்குத் தொண்டன் நான் அறஞ்செய்வதற்காகத் தான் கேட்கிறேன் என்று முகமன் கூறிவிட்டுத்தான் தன் ஆசையை வெளிப்படுத்துகிறார்.

அன்ன சத்திரமொன்று செட்டியாரே மேலாம்
அந்தணர்கள் தினம்புசிக்கச் செட்டியாரே
பொன்னித் தீர்த்தக் கரையில் செட்டியாரே திருப்
புத்தூரில் செய்ய வேண்டும் செட்டியாரே

நந்தவனங்கள் பலசெட்டியாரே உமக்கு

நறுமலர்த் தொடையல் சாத்த செட்டியாரே

சொந்தத்தில் செய்யச் செட்டியாரே யெற்குச்

சுவர்ணமிகத் தாருமையா செட்டியாரே

தீதில் வேதாந்தநூலைச் செட்டியாரே நிதஞ்

சிரவணாதிகள் செய்யச் செட்டியாரே

ஓதுமுமைப் பூசைசெய்யச் செட்டியாரே கூபம்

ஊறு மிடந்தனிலே செட்டியாரே

நீதிமடங் கட்ட நிதி செட்டியாரே நல்கு

நிருத்தனருளும் பழனிச் செட்டியாரே

செட்டியார் மாலையில் பழனி முருகனிடம் இவ்வாறெல்லாம் அறஞ்செய்வதற்குப் பொருள் வேண்டுமெனக் கேட்டவர் கல்லுளி மாலையில் செட்டித்தெய்வமே பழனிச் செட்டி என முருகனை அழைத்து

மன்னன் குமணனுக்கும் பழனிச்செட்டி நன்றாய்

வழங்கும் கர்ணனுக்கும் பழனிச்செட்டி

பன்னு சீதக்காதிக்கும் பழனிச்செட்டி - பணம்

பாலித்ததல்லோ கீர்த்தி பழனிச்செட்டி

அன்னவர்க்கு ஈந்ததற்காகப் பழனிச்செட்டி உமக்கு

அனேக வந்தனஞ் செய்தேன் பழனிச்செட்டி

பொன்னெனக்கு ஒல்லைதா பழனிச்செட்டி யறம்

புரிந்திட நடநீ பழனிச்செட்டி

என்கிறார். இன்று நகரத்தார் இனத்தில் பெண்மக்கள் குறைவு என்கிறது புள்ளிவிவரம். இதுபோன்ற தொரு நிலை சுமார் 100,120 ஆண்டுகளுக்கு முன்பும் இருந்திருக்கிறது. பெண்கள் கிடைக்காமல் நகரத்தார் இளைஞரது திருமணங்கள் கேள்விக்குறியாக இருந்திருக்கின்றன. பர்மாவில்1924 -இல் நடந்த தனவைசிய இளைஞர் மாநாட்டில் பிச்சப்பா சுப்பிரமணியம் போன்றோர் இதுகுறித்துக் காரசாரமாக விவாதித்திருக்கிறார்கள்.

பெண் வீட்டாருக்குப் பிள்ளை வீட்டார் பொன்னும் பொருளும் கொடுத்துத் திருமணம் செய்து கொண்டிருக்கிறார்கள். கொடுக்க இயலாதவர்கள் திருமணம் செய்து கொள்ள இயலவில்லை. இதையும் தம் பாடல்களில் பதிவு செய்திருக்கிற அய்யா, இளைஞர்களுக்குத் திருமணம் நடக்கப் பொருள் வேண்டும். அதையும் விரைவில் தா என்று முருகனுக்கு கட்டளையிட்டுத் தம் காலத்தில் நிலவிய சமூகப் பிரச்சனையையும் சுட்டிக் காட்டுகிறார்.

கண்ணப்பனுக்குப் பழனிச்செட்டி எங்கள்
கடைக்குட்டித் தங்கச்சியைப் பழனிச்செட்டி
பண்ணுகிறோம் என்பார் பழனிச்செட்டி முன்னைப்
பசுமை குறைந்திட்டாற் பழனிச்செட்டி
பெண்ணை வேறிடத்திலே பழனிச்செட்டி நாங்கள்
பேசினோம் என்பார் பழனிச்செட்டி
புண்ணிய வானே பழனிச்செட்டி ஒல்லைப்
பொருள்தா நடநீ பழனிச்செட்டி

இவ்வாறு நகரத்து இளைஞர் சார்பாகவும் பாடும் அய்யா அவர்கள்

தப்பாகக் கேட்கவில்லை பழனிச்செட்டி நான்
சத்தியவானல்லோ பழனிச் செட்டி
அப்பச்சிக்குத் தெரியுமே பழனிச்செட்டி நமது
ஆத்தாட்குந் தெரியுமே பழனிச்செட்டி

என்று சிவனை அப்பச்சி என்றும் உமையவளைக் குறிப்பிடுகையில் நமது ஆத்தாள் என்றும் முருகனையும் உளப்படுத்திக் கூறுவதைக் காண்கிறோம்.

இவ்வாறாக முருகனைச் செட்டிமகனாகக் கண்டு களிக்கின்ற பழனியப்பய்யாவின் பாடல்கள் நகரத்தார்களின் அக்கால நிலையைப் படம் பிடித்துக்காட்டுகின்ற வரலாற்றுப் பெட்டகங்களாகத் திகழ்வதோடு கோவிலூர் மடாலயத்தின் தமிழ்ப்பணிக்குச் சான்றாகவும் திகழ்கின்றன.

# கோவிலூர் மடாலய நிகழ்வுகள்

தெய்வத்திரு நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகளின் முதல் குருபூசை நாளை முன்னிட்டு 19.09.2012 முதல் 23.09.2012 வரை ஐந்து நாள் நிகழ்ச்சி ஐம்பெரும் விழாவாக அமைந்தது.

19.09.2012 அன்று மாலை 5.00 மணி அளவில் நிறுவனர் நாள் விழா, கோவிலூர் ஆண்டவர் கலையரங்கத்தில் நிகழ்ந்தது. கோவிலூர் ஆதீனம் சீர் வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் தலைமை வகித்தார்கள். கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரி முதல்வர் மூர்த்தி வரவேற்புரை நல்கினார். காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகத் துணைவேந்தர் பேராசிரியர் முனைவர் சேது. சுடலைமுத்து தமது சிறப்புரையில் நாச்சியப்ப சுவாமிகளின் அருமை பெருமைகளை எடுத்துரைத்தார். புண்ணியம் செய்தவர்களை நினைப்பதும், வழிபாடு செய்வதும் அவர்களைப் பற்றிப் பேசுவதும் தான் குருபூசையின் முக்கியத்துவம் என்றும் அவ்வாறு செய்பவர்களும் புண்ணியம் புரிந்தவர்கள் ஆகிறார்கள் என்றும் குறிப்பிட்டார். திரைப்பட இயக்குநர் உயர்திரு முத்துராமன் பேசும்போது திரைப்பட உலகில் தாம் உயர்ந்த நிலைக்கு வந்ததற்குக் காரணமானவர்களை நினைவு கூர்ந்தார். கோவிலூர் ஆண்டவர் மெட்ரிகுலேஷன் பள்ளி முதல்வர் திருமதி மணிமொழி நன்றியுரை வழங்கினார். பேராசிரியர் K.கலா நிகழ்ச்சிகளைத் தொகுத்து வழங்கினார்.

20.09.2012 அன்று மாலை 5.00 மணி அளவில் சமூக நலவிழா நடைபெற்றது. சனாதன தர்ம உலகப் பல்கலைக்கழக அற நிலையின் அறங்காவலர் திரு. நாராயணன் வரவேற்புரை வழங்கினார். அவர் தமது வரவேற்புரையில் நாச்சியப்ப சுவாமிகள் பிறருக்காகச் செலவு செய்யத் தமது செலவைச் சுருக்கியவர் என்றும்

எல்லோருக்கும் எடுத்துக்காட்டாக வாழ்ந்த மாமேதை என்றும் குறிப்பிட்டார். தமது தலைமை உரையில் சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் நாச்சியப்ப சுவாமிகளின் மனதுக்குப் பிடித்த செயலாக முதியோர்க்கான உதவித்தொகை வழங்குவதைக் கூறினார். சிறப்புரை ஆற்றிய திருமதி சித்ரா சுப்பிரமணியம் தமது உரையில் நாச்சியப்ப சுவாமிகள் நல்ல மனமும் கொடுப்பதற்குப் பணமும் கொண்டவர்கள் என்று குறிப்பிட்டார்.

கம்பனடி சூடி திரு. பழ. பழனியப்பன் தமது சிறப்புரையில் சீர் வளர் சீர் முத்துராமலிங்க ஆண்டவரின் சொற்பழுது புரியாத என்ற கூற்றுக்கு வடிவமாகத் திகழ்ந்தவர் நாச்சியப்ப சுவாமிகள் என்றார்.

திரு. காரைக்குடி நாராயணன் பேசும்போது சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகளின் கவிதை நயத்தைப் பாராட்டிச் சந்தக் கவி வேந்தர் எனப் புகழ் மாலை சூட்டினார். பொற்கிழிக் கவிஞர் பேராசிரியர் சொ.சொ.மீ. சுந்தரம் தமது உரையில் நாச்சியப்ப சுவாமிகள் போன்ற ஞானிகள் பிறந்த பூமி என்பதால் இந்தியாவுக்குப் பெருமை எனக் குறிப்பிட்டார். நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி முதல்வர் முனைவர் சே. குமரப்பன் நன்றியுரை கூறினார். காப்பியக் கவிஞர் நா. மீனவன் நிகழ்ச்சியினைத் தொகுத்து வழங்கினார்.

21.09.2012 அன்று நிகழ்ந்த விழா சமய இலக்கிய விழாவாக அமைந்தது. காப்பியக் கவிஞர், கவிஞர்கோ, நற்றமிழ் நாவலர் நா. மீனவன் வரவேற்புரை நிகழ்த்தினார். சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் எழுதிய கவிதைகளின் தொகுப்பான வாழ்வின் பயன் என்னும் நூலை ஊரன் அடிகள் வெளியிட, திரு. SLN.நாராயணன் பெற்றுக் கொண்டார். காப்பியக் கவிஞர் நா. மீனவன் எழுதிய நாச்சியப்ப சுவாமிகள் சதமணி மாலை என்னும் கவிதை நூலை ஊரன்

அடிகள் வெளியிட்டார். சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் பெற்றுக் கொண்டார். நூல்களை அறிமுகம் செய்து பேராசிரியர் ம. கார்மேகம் பேசினார். சன்மார்க்க தேசிகர் ஊரன் அடிகள் தம் தலைமையுரையில் சமயமும் இலக்கியமும் பிரிக்க முடியாதவை என்பதை வலியுறுத்தினார்.

திருமதி பாரதி பாபு பேசும் போது ஆன்மீகம் சார்ந்த சான்றோர்கள் முன்னிலையில் பேசுவதற்குக் கிடைத்த வாய்ப்பைப் பெருமையாகக் கூறினார். பேரூர் இளைய ஆதீனம் தவத்திரு மருதாச்சல அடிகள் இந்துக்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு நாளும் ஏதாவது ஒரு திருமுறைப் பாடல் கூறி வழிபட வேண்டும் என்றார். திருவிழாக்களிலும் திருத்தேர்க் காலங்களிலும் திரைப்படப் பாடல்களை ஒலிக்கச் செய்யக் கூடாது என்று வலியுறுத்தினார். கோவிலூர் மடாலய மேலாளர் திரு. அழகப்பன் நன்றி கூறினார். பேராசிரியர் ம. கார்மேகம் நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்கினார்.

நான்காம் நாள் நிகழ்ச்சியாக 22.09.2012 அன்று காலை 10 மணி முதல் டாக்டர் கே. பிச்சைக்குருக்கள், சிற்பக் கலாநிதி பத்மஸ்ரீ முத்தையா ஸ்தபதி, சன்மார்க்க தேசிகர் ஊரன் அடிகள் ஆகியோர் தலைமையில் தமிழகத்தின் பிரபலமான ஓதுவார்கள், சிற்பிகள், சிவாச்சாரியார்கள், வேத விற்பன்னர்கள் கலந்து கொண்ட கருத்தரங்க நிகழ்வு நடைபெற்றது. மாலை 6.30 மணியளவில் திரைப்பட இயக்குநர் திரு. கங்கை அமரன் நிறைவுரை ஆற்றினார். தமது திரை இசைப் பயண வரலாற்றைத் தொகுத்துக் கூறிப் பாடல்கள் பாடி மகிழ்வித்தார். ஊரன் அடிகள் தலைமை ஏற்றார். முனைவர் சே. குமரப்பன் வரவேற்புரை நிகழ்த்தினார். பேராசிரியர் கலா நன்றி கூற விழா இனிதே நிறைவுற்றது. பேராசிரியர் ம. கார்மேகம் நிகழச்சியைத் தொகுத்து வழங்கினார்.

ஐந்தாம் நாள் 23.09.2012 அன்று காலை 7.30 மணி முதல் குருபூசை விழா நிகழ்ந்தது. கோவிலூர் மடாலயத்தில் திருமுறை, தவில் நாதஸ்வரக் கலை பயின்ற முன்னாள் மாணாக்கரின் திருமுறை நாதஸ்வர இன்னிசை ஆராதனை நடைபெற்றது.

தெய்வத்திரு. நாச்சியப்ப சுவாமிகள் குருபூசைக்குப் பிறகு பிற்பகல் 3.30 மணி அளவில் பரிசளிப்பு விழா நிகழ்ந்தது. தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார், குருபூசை விழாவையொட்டி நடத்தப்பெற்ற மாறுவேடம், நடனம், ஒப்புவித்தல், ஓவியம், பேச்சு, மராத்தான் ஓட்டம் போன்ற போட்டிகளில் வெற்றி பெற்ற மாணாக்கர்களுக்குப் பரிசுகள் வழங்கி வாழ்த்துரை வழங்கினார். ஊரன் அடிகள் விழாவில் கலந்து கொண்டார். முனைவர் சே. குமரப்பன் நன்றி கூறினார். காப்பியக் கவிஞர் நா. மீனவன் அனைவரையும் வரவேற்றார். பேராசிரியர் கலா நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்கினார். பரிசளிப்பு விழாவில் அழகப்பா அரசு கலைக் கல்லூரி முதல்வர் முனைவர் தேவதாஸ், பேராசிரியர் சீதாலெட்சுமி, மெட்ரிகுலேசன் பள்ளி முதல்வர் மணிமொழி மோகன் , பள்ளி, கல்லூரி ஆசிரியர்கள், ஆசிரியைகள் மற்றும் மடாலயத்தின் அலுவலர்கள், பணியாளர்கள் உட்படப் பலரும் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.






## நாச்சியப்ப சுவாமிகள்
## கலை அறிவியல் கல்லூரி, கோவிலூர்

கல்வித் துறையில் பாரம்பரியமிக்க அனுபவம் நிறைந்த கோவிலூர் மடாலயம் நடத்தும் இக்கல்லூரியில் (Subject to approval) மாணவ மாணவியர் சேர்ந்து படித்துப் பயன்பெற வேண்டுகிறோம்.

**2012-2013 ஆம் கல்வி ஆண்டுக்கான மாணவர் சேர்க்கை நடைபெறுகிறது.**

**கற்பிக்கப்பெறும் பாடப்பிரிவுகள் :**

| | |
|---|---|
| பி.எஸ்.ஸி கணிதம் | பி.எஸ்.ஸி கணினியியல் |
| பி.காம். | பி.காம் (கணினிப் பயன்பாட்டுடன்) |
| பி.பி.ஏ | பி.ஏ. ஆங்கில இலக்கியம். |

தொடர்புக்கு : **04565 - 234523, 94434 42361**

---

## நகரத்தார் திருமணச் சேவை மையம்
## கோவிலூர்

நம் சென்னைத் திருமடத்தில் கடந்த ஒன்பதாண்டுகளாக, தேவகோட்டை உயர்திரு. சோம. லெட்சுமணன் அவர்கள் வழிகாட்டுதலின் பேரில் நகரத்தார் திருமணச் சேவை மையம் நடைபெற்று வருகிறது.

அதன் சேவையை விரிவுபடுத்தி இப்போது நம் கோவிலூர் திருமடத்திலும் தன்னார்வத் தொண்டர்களின் ஆதரவால் நந்தன ஆண்டு சித்திரைத் திங்கள் பத்தாம் நாள் தொடங்கப்பெற்று நடைபெற்று வருகிறது.

வாரந்தோறும் சனிக்கிழமை காலை 10.00 மணி முதல் மாலை 5.00 மணி வரை திருமணச் சேவை நடைபெறுகிறது. அனைவரும் சேவையைப் பயன்படுத்த வேண்டுகிறோம்.

தொடர்புக்கு : www.nagarathar.net , www. nagaratharmatrimony.com

# சனாதன தர்ம உலகப் பல்கலைக் கழக அறநிலை நடத்தும் கல்வி நிறுவனங்கள்

1. கோவிலூர் ஆண்டவர் பாரம்பரியக் கலை மற்றும் பண்பாட்டுக் கல்லூரி

   அ. திருமுறைக் கல்லூரி - 1995

   ஆ. நாதஸ்வரக் கல்லூரி - 1995

   இ. தவில் கல்லூரி - 1995

   ஈ. கல் சிற்பக் கல்லூரி - 2004

   உ. ஐம்பொன் சிலைக் கல்லூரி - 2005 (உலோகச் சிற்பம்)

   ஊ. மரச்சிற்பக் கல்லூரி - 2006

2. சீர் வளர் சீர் முத்துராமலிங்க ஆண்டவர் நர்சரி மற்றும் பிரைமரி பள்ளி - 1995
3. கோவிலூர் ஆண்டவர் மாண்டிசோரி பள்ளி - 1995
4. கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரி - 2007
5. கோவிலூர் ஆண்டவர் யோகா ஆராய்ச்சி மையம் - 2007
6. நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரி - 2009
7. கோவிலூர் ஆண்டவர் மெட்ரிகுலேசன் பள்ளி - 2010
8. கோவிலூர் ஆண்டவர் சமுதாயக் கல்லூரி - 2010
9. நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி - 2012ல் தொடங்கப் பெற உள்ளது.